உ

கல்லிடைக்குறிச்சி
இராஜபார்ட் சங்கீத சபா ஜனுப்
**K. P. முகையதீன் சாஹிப் அவர்களின்**



ஆசிரியர் ஆர்மோனியம்
**T. K. சுந்தரம் அவர்கள்**
இயற்றிய

பஜன ஜீவரத்னுமிர்த மென்னும்

# பக்திரசக் கீர்த்தனம்

(இரண்டாம் பாகம்.)

மதுரை புதுமண்டபம் புக்ஷர்ப்
**M. K. சந்தானகிருஷ்ணக் கோனர்**
அவர்களால்

...ர மீனுக்ஷி விலாஸ் பிரஸில்
...திப்பிக்கப்பட்டது.

 [விலை அணா 8.

உ
கடவுள் துணை.

பஜன ஜீவரத்னாமிர்தமென்னும்

# பக்திரசக் கீர்த்தனம்.

## (இரண்டாம் பாகம்)

இஃது

கல்லிடைக்குறிச்சி இராஜபார்ட் சங்கீத சரப ஜனாப்
கே. பி. முகையதீன் சாஹிப் அவர்களின்
ஆசிரியர் ஆர்மோனியம்
டி. கே. சுந்தரம் அவர்கள்.

இயற்றியது.

மதுரை புக்ஷாப் புதுமண்டபம்.
எம். கே. சந்தானகிருஷ்ணக் கோனார்
அவர்களால்

மதுரை மீனாக்ஷி விலாஸ் பிரஸில்
பதிப்பிக்கப்பட்டது.

 1927 [விலை அணா 8

உ

ஸ்ரீராமஜெயம்

# முகவுரை.

'கீர்த்தனம்' என்பது 'அவதாரபுருஷர்களின் கீர்த்திப்பிரதாபங்களைப்பற்றிப் பல்லவி அநுபல்லவி சரணம் என்கிற மூன்றன் பாகுபாட்டில் பல இராகதாள வண்ணமெட்டுக்களில் இசைத்துப் பாடுகின்ற ஓர்வகைப்பிரபந்தம்' எனப் பொருள்படும். இதுபெரும்பாலும் கடவுளினது கீர்த்திப் பிரதாபங்களைப்பற்றியே பக்தர்கள் தாம் வழிபடு கடவுளர் மாட்டுக் குறையிரந்து நிற்பது தொன்றுதொட்ட மரபு. இத்தகைக் கீர்த்தனப்பாசுரங்கள் நமது தமிழ் நாட்டின்கண் வெளிப்போந்துள்ளன அனந்தமாவன வெனினும் அவை பலகோடி மற்றைப் பிரபந்தங்களைவிட ஒரு கோடி இன்னு மதிகரித்தல் வேண்டு மென்பது "பாமரர்களுங்கூட இப்பாசுரங்களைப் பாடுந்தோறும் கேட்குந்தோறும் பக்திவசப்பட்டு, அவர் காலமெல்லாங்கற்றுத்தேர்ந்தடைகிற ஒருபெரும்பயனை ஒருகைநொடிப் பொழுதின்கண் பெறுகின்றாராதலினென்ப" உதாரணமாக ஆழ்வாராதிகளது பிரபந்தங்களில் பகவான் ஈடுபட்டிருப்பதைப் பார்க்கிலும் ஸ்ரீதியாகராஜ சுவாமிகளது கீர்த்தனங்களில் பகவான் ஈடுபட்டிருப்பது ஒருபடித்து அதிகமென்றே கூறுவாமாறு சுவாமிகளது சரித்திரவரலாறறிந்தார் உணர்வார். கீதபீடமாகிய நாரதருங்கூட ஒருகால் சுவாமிகளது கீர்த்தனத்திலீடுபட்டு அவர் வீடு தேடி வந்துளாரென்றால் கீதத்தின் மகிமைதான் என்னே? "கீதமூதித்திரியவே பகவான் கிருஷ்ணாவதாரமெடுத்தனன்" என்பினும் அது ஒருவாறமையும். ஆகவே அத்தகைக் கீதங்கலந்திசைக்கும் இத்தகைத்தெய்வபக்திக் கீர்த்தனங்களே நமது தமிழ் நாட்டுக்கு இற்றைப்போழ்து மற்றைப் பிரபந்தநூல்களைவிட ஒரு சிறிது கூடுதலாயிருப்பது மிக்க இன்றியமையாதது என்பது ஒருதலை.

நிற்க இந்நூல் எமது ஆப்த நண்பரும் பல நாடகங்களுக்கும் சில நாடக நூல்களுக்கும் ஆசிரியராயிருந்து வருபவரான ஆர்மோனியம் டி. கே. சுந்தரம் அவர்கள் இயற்றியதாகும். இது இவர் முன்னர் இயற்றி வெளிப்போந்துள்ள பஜனஜீவ ரத்னாமிர்த பக்திரசக்

கீர்த்தனத்தினது இரண்டாம் பாகமாக இப்போது வெளிவந்துள்ளது. இவரினது பாவண்மையைப்பற்றி ஒருவாறு இதன் முதற் பாகத்தின்கண் அமைத்துள்ள முகவுரை வாயிலான் கூறியிருக்கின்றேம். என்றாலும் "இறைவனே வாய்மலர்ந் திரீஇயநூ லாயினும் முறைவகுப் பியம்புமோர் முன்னுரை வேண்டும்" என்றபடி இந்நூலுக்கும் ஓர் முகவுரை வேண்டுவதாவசியமாயிற்று. இனி இதனில் ஈண்டு யாம் எடுத்துக்கூறவேண்டுவன பலவெனினும் அவற்றுள் சிலவேனும் செப்புதல் "கல்வி என்பது கசக்குமோ புளிக்குமோ" என்றும், பக்தி என்பது பாம்போ தேளோ என்றும் எண்ணிக் கொண்டுள எம்போன்றார்க்கு அக்கல்வியின் கற்கண்டன்ன சுவையும் பக்தியின் பயனும் இத்தகையனவென உணர்வுதோன்றி அதன் காரணமாகப் பகவான்மீது கடுகளவு ஞாபகமாவது தோன்ற, அதனின்று உதிக்கின்ற பக்திவசப்பட்டுத் தாம்பெற்ற பிறவியின் பெரும் பயனை அடைதற்கு ஏதுவாம் என்பது எமது நோக்கம்.

அதற்கிணங்க இந்நூலாசிரியர் தாமொரு தொண்டனாகவும் தம்மை ஆட்கொள்ளும் தலைவன் குமாரக்கடவுளாகவும் கொண்டு அக்கடவுளாது திருக்கரத்துக் கிளியுரு வெடுத்தமர்ந்துள்ள நாம் கருப்புகழைக் கடக்குமாறு நமக்குத் திருப்புகழைச் செப்பி யீந்தருளிய ஸ்ரீ அருணகிரியாரைத் தமக்குத் தூதுசொல்லவிடுக்குந் துறையில் நமது தமிழ்நாட்டின்கண் பெரும்பாலும் பாவி எவரேனும் ஒருவர் பாடும்போழ்து பண்டிதர் முதல் பாமரர் வரை என்? பால் மணம் மாறாப் பாலருங்கூடக் கேட்டுத்தமது உள்ளத்தைக் கடவுள்பால் கொள்ளை கொடுத்து நிற்குமாறு செய்து வருகிற முருகனிடமென் முறைசொல்வாய் கிளியே என்ற பாடலை எடுத்துக்கொண்டு அதில் முற்றும்முனை நம்பிய ஒரு பக்தன் சொலும் சங்கதி என அந்த என்ற தொடக்கம் முதல் நோயற்ற வாழ்வும் குறைவற்ற செல்வமும் என்ற சரணத் தொடர்வரை அமைந்து கிடக்கின்ற சொற்களையும் சொற்றொடர்களையும் அவற்றினின்றே ஊற்றுப் பெருக்கெனப் பெருகி ஊற்றுப்பெருக்கெனமிளிரும் பக்திரச கவிநய அலங்காரங்களையும் நோக்குவேமாயின் இற்றைக்கும் நிரம்பிய கல்வியாளர் "கவிநயக் கடல்" என்று கண்டு பிடித்துள்ள பல சங்ககாவியநூல்களிலுங்

கூட இப்படி ஒருநயம் இருக்கின்றனவா என்று இறும்பூது கொள்ளுமாறமைந்து கிடக்கின்ற பெற்றி இனிது விளங்கும்.

இனிக் "கோருங்கள் கோருங்கள் கோருங்கள்" என்ற,பாட்டின் தொடக்கத்தில் நுனியினின்று அடியின்வரை கணுக்கள் தோறும் அதிகரித்துக்கொண்டே செல்லும் கரும்பின் சுவையன்ன அடிகள் தோறும் சொல்நயம் பொருள்நயம் அதிகரித்துக்கொண்டே செல்லும். "பொல்லாத லோபியர் கைப்பொருள்போலே பூமியில் நாமிருந்தென்ன மென்மேலே எல்லாமவன் செயலென்றெண்ணினாலே இருட்டில் விளக்கை எதற்கு வகித்தோம்" என்னும் சொற்றொடர்கள் வேதவேதாந்த நூல்களும் துணியமுடியாது மயங்குகின்ற அத்வைதசாரத்தை அப்படியே பிழிந்தெடுத்து நமக்குண்ணக் கொடுக்குமாறமைந்து உண்மைஞானி ஒருவன் உலகத்தை எங்ஙனங்கருத வேண்டுமோ அங்ஙனமே பல உவமை வாயிலான் விளக்கி உள்ளுந்தோறும் உவகைபூப்பக்கிடக்கின்ற பெற்றி இவரது உவமை கூறும் ஆற்றலைக் காட்டி நின்றது. இனி இவர் பாடியுள்ள "கனவு போலாம் மனிதர் வாழ்வு" என்ற பாடலைப்படித்து அதில் மணற்கேணி தொட்டார்க்கு நீர்சுரந்தன்ன வஸ்து நிச்சயப்பொருள் சுரக்கும் தன்மையும் பகவற்கீதையார் "ஐவகைப் பொருளும் நான்கு காரணமும் குணங்கள் மூன்றும் செய்வினையிரண்டு மொன்றி யாவருந்திகைப்ப நின்ற பொய்யிருளகலஞானப் பொருட் கதிர் விரித்த புத்தேள் கைவளராழிச் செங்கட் கண்ணனைக் கருத்துள் வைப்பாம்" என்று ஒருபெரும் விருத்தத்துள் திணறிக்கொண்டு சொல்லிமுடித்த அதே விஷயத்தை இவர் "சப்தபரிசரூபரசகந்தம் தன்னில் வேதாந்தரகஸ்யமானந்தம் அப்பொருள் காண்போர்க்கே மெய்ப்பொருள் சொந்தம்" என்ற சிறுச்சிறு மூன்று வாக்கியத்தினுள் அமைந்துள்ள அரும்பொருள் வண்மை அளவு கடந்த வியப்பையும் ஆனந்தத்தையும் ஊட்டுகின்றன. இனி மதுரை மான்மியச் சிறப்பு திருவனந்தபுரக்காட்சி இவையிரண்டு பாக்களும் இயற்கை நவிற்சி துலங்க அவ்வவ் ஆலயங்களின் அமைப்புக்களை அப்படியே அள்ளித்தந்தாங்கு உள்ளது உள்ளவாறு தெள்ளிய தமிழ் நடையில் தேனூறலன்ன பண்ணமைந்து மிளிர்வது பாராட்டற்பாலது.

இனி வேதாந்த சாஸ்திரங்கள் தோறும் மனதைக் குரங்கி ேைடு உபமானித்துக் கூறப்பட்டிருக்கின்றன. அருட்பிரகாச வள் ளலாராய ஸ்ரீ இராமலிங்க சுவாமிகளுங்கூட "மனமெனுமோர் பேய்க் குரங்கின் மடப்பயலே" என்று தமது மனதை முன்னிலைப்படுத்தி அதற்குப் பல நற்புத்தி போதிக்கின்றனர். என்ருலும் இவர் ஸ்ரீ கண்ணபிரானை முன்னிலைப்படுத்திக்கொண்டு அவரிடத்துத் தம் மனதின் தன்மையைச் சொல்லுகின்றபோது "சேட்டைக்குரங் கேனும்" என்ற தொடக்கத்தில் மனத்தின் தன்மை கூறுவார் போன்று குரங்கின் தன்மையையும், குரங்கின் தன்மை கூறுவார் போன்று மனத்தின் தன்மையையும் ஓரழகிய துறைமுகத்து வனப் பைச் சித்திரக்காரன் ஒரு திரை முகத்து வரைந்து காட்டினுற் போன்று விளக்கியிருப்பது வியப்புறத்தக்கது. இது பண்டைக் காலத்துச் சங்கப்புலவருள் பெருஞ்சித்திரனுரென்ற பெரியா ரொருவர் குமணவள்ளலிடத்து பரிசில் வேண்டிச்சென்று கூறிய செய்யுளில் "முட்புறமுதுகனி பெற்றகடுவன் துய்த்தலை மந்தியைக் கையிடூஉ பயிரும் அதிராயாணர் முதிரத்துக்கிழவ" என்னும் அடித் தொடக்கத்தையும் "உயர்கோட்டு மகவுடை மந்திபோல வகனுறத் தழீஇக் கேட்குணர்ப் பெறினே" என்ற குறுந்தொகைச் செய்யுளை யும் ஞாபகமூட்டுகின்றது. பின்னுமோர் பாட்டில் "ஈயாத லோபி யர்களிட மணுகி வாழ்வதேன்" என்ற தொடக்கத்தில் ஸ்ரீ இலக் குமியை முன்னிலைப் படுத்திக்கொண்டு இற்றைக் கிரண்டாயிரம் வருடங்களுக்கு முன்னர் கடைச்சங்க காலத்து ஓர் புலவர் தமது வறுமையை முன்னிட்டு இலக்குமியை முன்னிலைப் படுத்தி "நாருத்தகடேபோல் நன்மலர் மேற் பொற்பாவாய் நீருய் நிலத்து விளியரோ-வேருய புன்மக்கள் பக்கம் புகுவாய் நீ பொன்போலும் நன்மக்கள் பக்கம் துறந்து" என்று அவளைச் சபித்ததுபோலல்லா மல் அவளது இயற்கைக்குணம் இன்னதென்று இனிதாக எடுத்துக் கூறி அவ்வாறு செய்யாமல் தமக்கருள்புரிய வேண்டுமென்று இரங்கி யிருப்பது மனத்தின்கண் உருக்கத்தைப் பெருக்குகின்றது.

"தினகாகுலதேவதியே" என்றும் இவர் பாடல் ஒன்றிருக்கிறது. அதைச் சிலர் தினகாகுலத்தில் உதித்ததேவதியே என்று பொருள் கொண்டு மதுரை மீனுட்சி சந்திரகுலத்தில் உதித்தனளே யன்றிச்

சூரிய குலத்தில் உதிக்கவில்லையே! அங்ஙனமிருக்க இவர் திருவிளையாடற் புராணத்தைப் படியாது இப்படிச் சொல்லியிருப்பது தவறு என்கின்றனர். யாமதற்குச் சமாதான மெழுதியும் அவர் மனது திருப்தியடையவில்லை யென்று தெரிந்தது. அதற்கின்னும் பல உதாரணம் வேண்டுமெனில் "தசரதராஜ குமாரா" என்ற வாக்கியத்தை எடுத்துக்கொண்டு இலக்கண முறையாகத் தசரதராஜனாகிய குமாரா என்று இருபெயரொட்டுப் பண்புத்தொகையிலும், தசரத ராஜனுடைய குமாரா என்று ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத் தொடரிலும் விரித்துப்பொருள் கொள்ளலாம். ஆனால் இலக்கியப் படி அவ்வாக்கியம் தசரதராஜனைப்பற்றியதென்றால் முன்னையதும் ஸ்ரீராமனைப்பற்றிய தென்றால் பின்னையதும் பொருந்தும். இதனை ஒன்றுக்கொன்றாகப் பிரித்துக்கொண்டு முரண்படுவது நிரம்பிய கல்வியாளர்தம் மரபன்று. அங்ஙனமே மதுரை மீனாட்சி சூரிய குலத்தில் உதிக்கவில்லையாகவே தினகாகுல தேவதியே என்பதைத் தினகர குலத்தில் 'உதித்த' தேவதியே என்று பிரிப்பது பொருந்தாது. தினகர குலத்துக்குத் தேவதியே என்று நான்கன் தொகை நிலைத்தொடரில் விரித்துப் பொருள் கொள்ளுதல் வேண்டும். இதுவே நூல் மரபு. பஞ்சகாவியங்களில் ஒன்றாகிய சிலப்பதிகாரமுடையார் இளங்கோவடிகள் மாந்தருக் கிதங் கூறுகின்றவிடத்துப் "பொய்யுரை யஞ்சுமின்புறஞ்சொல் போற்றுமின்" என்கின்றார். இதனை இரண்டனுருபு நோக்கதாக விரித்துப் புறங்கூறலைப் போற்றி ஆதரியுங்கள் அதாவது 'புறங்கூறுங்கள்' என்று அவர் பாடியிருப்பதாகப் பொருள் கொள்ளுவது பொருந்துமா? அங்ஙனம் பொருள் கொண்டு அவர் பாட்டில் குற்றம் என்று கூறுவதும் பொருந்துமா? 'புறங்கூறலை விலக்கி நலங்கூறலைப் போற்றுங்கள்' என்று இசை யெச்சமாக வல்லவோ பொருள் கொள்ளுதல் வேண்டும்? கல்வியிற் பெரியா ராய கம்பருங்கூட ஆரண்யத்தில் முனிவர்கள் ஸ்ரீராமபிரானைச் சரணடைந்து அவர்களது குறைகளை விண்ணப்பிக்கின்ற போழ்து "அன்னதாதவி னேயின வாண்டெலாம் இன்னல்காத்திங் கினிதுறை வாயென" என்று அருளியிருக்கின்றனர். இதில் 'இன்னல் காத்து' என்ற வாக்கியத்திற்கு இன்னலைக் காத்து என்று பொருள் விரித்துக்கொண்டு அவர் மீதும் குற்றங்

கூறக் கிளம்பி விடலாம். ஆனல் இலக்கணநூல் அதற்கிடங்கொடாமல் "பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும் என்றும் உருபும் பயனுந்தொக்க தொடர்" என்றும் முறைவகுத்துக் கூறியிருக்கின்றன. இனி இத்தகையார் ஞானவாசிட்டமென்ற ஒப்பற்ற நூலிலும் ஸ்ரீராமர் வசிட்டமகரிஷியை வந்து வணங்கியபோது 'தீர்க்காயுசாக வாழ்வாயாக' என்று அவர் ஆசீர்வதித்த வாக்கியத்தை எடுத்துக் கொண்டு'தீர்க்கா-திடபுத்தியுள்ளவனே, (யு-you) நீ, சாக-செத்துப் போவாய், வாழ்வு-நினது ஆயுள், ஆயாக-முடிந்துபோக' என்று பொருள் விரித்துக்கொண்டு வசிட்டமகரிஷியையும் குற்றங்கூறுவர் போலும்! இத்தன்மையாளரைத்திருத்த ஈசனலு மாகாதெனில் யாமென்செயக் கடவேம்? மானுடர் தம் மயக்கறுத்து அவர் தம் பிறவிக்கடலை நீந்திக் கரைகண்டுய்ப்பித்தற்கே வெளிப் போந்துள்ள தெய்வவள்ளுவர் திருக்குறளிலுங் கூடக் குற்றங் கற்பித்து விடுவர் என்று கண்ட சங்கப்புலவருள் ஒருவராய மாங்குடி மருதனர் அந்நூற் சிறப்புக் கூறுங்கால் "ஓதற்கெளிதாய் உணர்தற்கரிதாகி வேதப் பொருளாய் மிக விளங்கித்-தீதற்றோர் உள்ளுதோ றுள்ளுதோறுள்ள முருக்குமே வள்ளுவர் வாய் மொழி மாண்பு" என்று கூறினர். இதில் தீதற்றோரென்றாராதலின் தீதுற்றோர் அதிற்குற்றங் கற்பித்து விடுவர் என்பது பெறப்படுகின்றது. இனியும் யாம் இதனை விரிப்பிற் பெருகுமாகவே இந்நூலிலுள்ள பாக்களைப்பாடும் பண்ணிசையாளர் இதன் சொற் சுவை பொருட்சுவை பக்திரச முதலியன பருகி யுள்ளத்து வெள்ளமென மகிழ்வடைவாராக.

கொடையருமை கொண்டலின்பாற் கொண்டுணர்மின் கூடும்
படையருமை பற்தனன்பால் பார்மின்—நடையருமை
தந்தையின்பாற் கேட்டுணர்மின் தண்டமிழின் சொல்லருமை
சுந்தரன்பாற் கேட்டுணர்மின் தோய்ந்து.

இங்ஙனம்,

நா. கிருஷ்ணசாமி நாயுடு,
தமிழ் வித்வான் மதுரை.

உ

ஸ்ரீராமஜெயம்.

# பஜன ஜீவரத்னாமிர்தமென்னும்

# பக்திரசக்கீர்த்தனம்.

## இரண்டாம் பாகம்.

---

### விநாயகர் துதி.

சந்த விருத்தம்.

திருமகட் கருகனைத் திரைகடற் சயனனைப்
பரிமளத் துளபனைப் பரமசத் புருடனைச்
சுரலயத் தமிழிசைத் துதிசெயத் துணையருட்
பிரணவக் கணபதிப் பிரபலச் சரணமே.

### கலைமகள் துதி.

வெண்பா.

புவிராஜர் யாவருமே போற்றுபுக ழீய்ந்து
கவிராஜ பூஜிதரைக் காக்கும்—நவில்வேத
நாயகியே நல்லிசைகள் நான்பாட நற்றமிழை
நேயமுடன் நீயருளல் நேர்.

வாதாபிங்கணபதீம் பஜே என்ற வர்ணமெட்டு.

இராகம் அம்ஸத்தொனி தாளம்-ஆதி.

பல்லவி.

வாயோக கணபதி ததி கதி
வாஞ்சையோடு சுந்தரன் நம்புந்துணை (வா)

அநுபல்லவி.

தூயகுண சுரர் தொழும் ரமண
தோரண சுபக் காரிய நிபுண
தோத்திரச்சுய கீர்த்தனப்ரிய
பிரார்த்தனைப்படியே பூர்த்தியுற்றருள (வா)

சரணம்.

சதானந்த சாம்பவி யருள் பாலா
சதுர்ப்புஜா ஜெயப்ர ஜாநு கூலா
தரா தரா சௌக்ய விசாலா
சகாப்தனே சகலஞான நூலா
சரணாரவிந்தம் சார்ந்தேன் மேலா
ததியிதே யருள் தருஞ்சுசீலா
தயாபரப்ரணவ ரூபமூலா
சம்ரட்சக பூஜித சம்போஹர
சங்கத்தமிழ் பாஷிய வித்யாகர
அன்பர்க்கதி யூர்ஜித லம்போதர
அம்ஸத்தொனி பாசுர விக்னேஸ்வர (வா)

நீது சரணமுலே என்ற கீர்த்தனை வர்ண மெட்டு.

இராகம்-சிமேந்ரமத்திமம் தாளம்-அடதாளசாப்பு.

பல்லவி.

வெண்—தாமரை வனிதையே ததியருள்
தனையன் நம்பினேன் சாரதாவே தாமாதா. (தா)

அநுபல்லவி.

மாமணீமகாகலையில் நிபுணீ—மதி
மகிமைசேர் மண மேவுபாசுர—மாலிகா (தா)

சரணம்.

பாவலர்க்கருள் பாரதி—சுக
பாக்யவித்தக வாருதி—எனை
மேவியாள வேண்டினேன் மகிழ்வாய்—துதி
விரதசுந்தரன் சரணமங்கள—தாயேசெழுந் (தா)

---

## ஆஞ்சனேயர் வணக்கம்.

மோரே மனுலகு தனுக னுஒ என்ற பல்லவி.

பல்லவி.

வி— ஜெய ஜெய மாருதியே—க்ருபை
செய்குவாயினு ததியே (ஜெ

அநுபல்லவி.

| | | |
|---|---|---|
| புயபல வீர | புகழுறுஞ்—தூய | |
| புனிதவானரப் | புரவலன்—நேய | |
| நயகுணுதிசய | ராமசகாய | |
| நாதசங்கீதவி | நயமுரையாய | (ஜெ) |
| கடல்கடந்துமிகு | கனராமன்—தேவி | |
| கவலைதீரசிறு | கவியென—மேவி | |
| விடைகணையாழிதந்து | வியந்திடத்—தாவி | |
| விஸ்வரூபமரு | வியசிரஞ்—சீவி | (ஜெ) |
| சுந்தரன் தனக்கென்றுந் | துணைசெய்ய—வாராய் | |
| சூட்டும் யோக | நாட்டையாளச்—சீராய் | |
| அந்தரத்தேவருக் | கதியுப—காரா | |
| அஞ்சனு தேவியின் | அருமைக்குமாரா | (ஜெ) |

---

தசாவதார ராகமாலிகை.

நீயுரைப்பாய் அநுமானே என்ற பல்லவிபோல் எடுக்கவும்.

இராகம்-ஸ்ரீராகம் தாளம்-ஆதி.

பல்லவி.

| | | |
|---|---|---|
| ஸ்ரீராகவாநின் | சரணம் | |
| சிந்தித்தேன் | மாதவ | (ஸ்ரீ) |

அநுபல்லவி.

பார கோதண்ட ஜெய வீரா—தீ தண்டிடாது
பக்ஷமிக்க வைத்து நத்தி—படிமிசை
பதவிதர விதுதருண மெதிர் வருக (ஸ்ரீ)

சரணம் இராகம் சுருட்டி.

பூமியைச்சுருட்டிப்பாய்—போலொளித்த சூரனைத்
தாவிவராக ரூபந் தானெடுத்தே வதைத்த (ஸ்ரீ)

இராகம் கானடா.

ஓடுங்கா னடாத செய லுருத்துமிரண்யன்தனை
நடுங்கி மடியச் செய்த நரசிம்மவதாரனே (ஸ்ரீ)

இராகம்-தோடி.

விந்தையாய் வியந்தோடி விரைந்தமுதங் கடைய
மந்த்ரகிரி சுமந்த மாலே கூர்மவதார (ஸ்ரீ)

இராகம்-மோகனம்.

இந்த்ரதேவர் ரம்மிக்க ஏமாந்து சூரர் நிற்கத்
தந்திர மோகனவ தாரமெடுத்த சுக (ஸ்ரீ)

இராகம்-வசந்தா.

சதுர்வேதங்களுஞ் சப்த சமுத்திரத்திற் கிடக்கக்
துதி வசந்தானெடுத்த தூய மச்சவதார (ஸ்ரீ)

தன்யாசி.

பூவியில்தன்யாசித்த போராதவோரடிக்கி
மாவலிமுடிதாழ வாமனவதாரனே (ஸ்ரீ).

இராகம் பைரவி.

ஞான கோகுலமுற்றும் நம்பும் க்ருஷ்ணவதார
கான பைரவிக்கதி கண்ய சகோதர (ஸ்ரீ)

இராகம் மத்திமாவதி.

மத்தி மாவதியென மன்னர் குலங்கள் மிக்கப்
பத்தியாய்ப் பணிந்தஞ்சிடும் பாசுராமவதார (ஸ்ரீ)

இராகம் சகாண.

நிலைத்ததுன் சகா ணனிலம்புகழ் சுந்தரன் தன்
கலிக்கவதாரம் நேரும் காருண்யக் கடவுளே (ஸ்ரீ)

---

ஸ்ரீராம சீதா லங்காவிஸ்வரூபா என்ற கீர்த்தன வர்ணமெட்டு.
இராகம் ஆபோகி—தாளம் ஆதி.

பல்லவி.

சீதாமணாள உயர்
தீனதயாள குணாள (சீதா)

அநுபல்லவி.

ஆதாரம் நீயே வேறில்லை
ஆண்டருள் செய்வாயே நீயே (சீதா)

சரணம்.

தார்புகழயோத்தி தசரத
சத்ய சக்ரவர்த்தி
பேர் விளம்பும் நீபா சுந்தரன்
பேரின்பப் ரதாபா வியாபா (சீதா)

---

தசரதராஜ குமாரா என்ற வர்ணமெட்டு.

இராகம் இந்துஸ்தான் காப்பி—தாளம் ஆதி.

பல்லவி.

தினகர வம்சச்சிலாக்ய யோகபாக்ய பிதுர்
வாக்ய பரிபாலனு (தி)

அநுபல்லவி.

ஜெனக ராஜசுபுத்ரி சீதா சமேதா
திவ்ய மாருதி யேந்தும் திருமலர்ப்பாதா
கனவிலும் நினவிலும் கருதும் விநோதா
காட்சி தந்தருள லாகாதா
இன்னும் சூதா துர்வேதா நீதியிதா (தி)

சரணம்.

சோதர பரதன் கொள் சோகத்தை நீக்கி
சொற்படி யாண்டு பதினாலையும் போக்கி
ஆதாளி செய்யுமந்த அரக்கரைத்தாக்கி

அனைவர்க்கு மருளிய மெய்யா
மலர்க்கையா புகழ்துய்யா ராமையா (தி)
சுந்தரன் சொலுஞ்சுயத் துதிக்குபகாரா
சுரர்புகழ்தசரத சுகுணகுமாரா
விந்தையுறும் பஜனை விளங்குங்கெம்பீரா
வீரகோதண்ட ஜெயவேந்தா குணசாந்தா
ஆபத்பாந்தா அருள்புரிவாய் (தி)

---

மதுரராகவஜனியேநீ என்ற வர்ணமெட்டு.

இராகம் அடாணு—தாளம் ரூபகம்

பல்லவி.

விஜயநாம பஜனை நேம
வீமா பரந் தாம க்ஷேம (வி)

அநுபல்லவி.

சுஜன நேத்ர
உஜித க்ஷேத்ர
துதி செய்தேனே கதி நீதானே (வி)

சரணம்.

முராஹரி ஜெகன் மோகன—சுர
முனிவர்கள் தொழும் யாகன-சொல
வரியகருட வாகனதன
வாதனே சுசரிதனே கோ

விந்தா வளர்பெறும் வை
குந்தா புவிதனி லே
எந்தா—யகமணி யே
யுந்தா—வினைசத மே
உயர் செந் திருமங்கை நிதந் தழுவும்
புய ரஞ் சிதனேதுதி சுந் தரன்பண்
பூணுங்கண் டாலின்பங் கூடும் பொன்
ஸ்ரீரங்கம்
பூங்கருணை யோங்கியது
தேங்குசுக பாங்குடைய (வி)

---

கிருஷ்ணன் வேணுகானலீலை விளக்கம்
அபராமபக்தியேந்தோ என்ற கீர்த்தனை வர்ணமெட்டு.
இராகம் பூர்யகல்யாணி—தாளம் ரூபகம்.

பல்லவி.

வேணுகானமூதினர் மாலை
வேளையில் கோபால கிருஷ்ணன் (வே)

மகுடங்கள்.

விதாணமிகு சுரலயகன
மதுரிதமெவர் செவியிலும் புக சுக (வே)

வேதமர்மம் விளங்கி நாதப்ரம்ம முளங்கிட சுக(வே)

விந்தையர் தும்புருநாரதர்
கந்தருவரும் களிபொங்கிட சுக (வே)

அநுபல்லவி.

பூணுமெழில் சேர் பொன்னாரங்களசையப்
புல்மேயும் பசுக்க ளெல்லாமொன்றிசைய (வே)

சரணம்

கானசுரபூர்ய கல்யாணிராகம்
கனிந்தநாதத் தொனியாலே—ஜீவ
காருண்ய கோபிகைப் பெண்கள் கருத்தைக்
கவர்ந்தது கேட்க மென்மேலே
தேனமுதம் போல் திகட்டாது மூளும்
தேவசங்கீதச் செயல்தனைக் கேளும் (வே)

கேட்குமிடத்தைக் கிட்டுவோமெனப்பல
பாட்டையிலும் மாதர் கூட்டம்—தா
லாட்டிப் பிள்ளைக்குப் பாலூட்டிடாமல் மறந்
தோட்டமெடுத்தோரெ தேஷ்டம் தன்தன்
வீட்டைவிட்டு நாதங் கேட்ட நினைவால் மை
போட்டொரு கண்ணுக்குத் தீட்டாதலைந்திட (வே)

நாமமிட்டுமிலே முன்பாயமர்ந்திட்ட
நாதனையே மறந் தார்கள்—சிலர்
தாமதமாய்விட்ட தால் கொதியன்னத்தைத்

தான்வடிக்க மறந் தார்கள்—பலர்
ஆமடி யெசோதை பிள்ளைமாயக்ருஷ்ணன்
சாமான்யமல்லவென் றேமாந்தலைந்திட (வே)

ஆடுகளோட்டி யவரவர் வீடேகி
அலுத்திளைப் பா றும் நேரம் ஆயர்
வீடுகளிலொரு பெண்ணுகிலுமில்லா
விந்தையைக் கண்டாரெல்லோரும்
கூடிச்சினத்தைக் கொண்டாடித்தெருவெங்குந்
தேடச்செவிச் செல்வம் நாடித்திகைத்திட (வே)

பந்திபந்தியாக ப்ரந்தாவனந்தனிற்
சிந்தை மகிழ்ந்து கொண்டாடப்—பெண்கள்
தந்தம்கணவரும் வந் திசைந்தார் க்ருஷ்ணு
நந்தமெனத் துதிபாட
இந்த்ராதி தேவர்களெல்லோரும் ரம்மிக்க
சுந்தரன் பண்புருஞ் சங்கீதஞ் செழிக்க (வே)

---

வஜ்நாரதநாராயண என்ற கீர்த்தனை வர்ணமெட்டு.

பல்லவி.

ஹரி நாரண கருணுகரத்திரு
வருளே புரி யனந்தசயன முரா (ஹரி)

அநுபல்லவி.

திருமாது மணுள பன்னுளுனையே—துதித்
தேன்—செழுந் துளபமார்ப முர (ஹரி)

சரணம்.

தந்தை தாய் குரு தெய்வமும் நீயே
சகலலோக சம் ரக்ஷணுவாயே
செந்தேன் தமிழ் சுந்தரன் நம்பும்மகா
தேவா கோவிந்த வைகுந்த (ஹரி)

---

வினயா ஆசக்கோனியூ என்ற கீர்த்தன வர்ணமெட்டு.

பல்லவி.

வரதா சுக சரிதா பூஜித
வாமனுவதார ஸ்ரீ (வர)

அநுபல்லவி.

பரிதாப மென்பா லுனக்கேனில்லையா
பக்தவாச் சல்யகுண (வர)

சரணம்.

அயிலையெனும் பொய்கையதனிலே
ஆதிமூலமே யுனக்
கபயமென்றலறும் பொழுதிலே

யானைமீள வுதவிய
தயவானவனே இனியே எனையாள்
தாச சுந் தரன் துதி (வர)

---

எப்படியிருந்தால் நமக்கென்ன என்ற மெட்டு.
இராகம் தர்பார்—தாளம் ஆதி.
பல்லவி.

பாதாதாரமே யருள் சகாயா மகா
பாரதப்போர் வெல்லப் பார்த்த
சாரதியாய் வந்த நேயா (பா)

அநுபல்லவி.

மாதாபிதா சற்குரு தெய்வமும் நீயே
மண்ணும் விண்ணும் மகிழ்ந்தேற்றுங்
கண்ணனெனுஞ் சேயே (பா)

சரணம்.

சேட்டைக் குரங் கேனும் தன் தன்
சேகரங்க ளோடு கூடிச்
சித்திரம்போலோர் கிளையிற்றூங்கும் எந்தன்
சிந்தையப்படி யல்ல காண் ஜெனிக்கும்
சொர்ப்பனத்திலும்
சென்றுபவபந்தங் களி லேங்கும்

வாட்டமற் றிருக்க ஞான
வழியினிலே நில்லாது
வஞ்சகம் கட்காமலோப
வகைபுகலே பொல்லாது (பா)

கப்பிய விருட் டறையில்
கண்ணுக்குத் தோன்றுமோ நிலக்
கண்ணுடியின் கண் முகத்துச்சீரே—சொல்ல
கன்மமுண்டா ஞேலோ இந்த
ஜென்மமுண்டென மெஞ்ஞானக்
கண்விழித்தோர் கண்டுரைத்தவாறே—இனி
எப்படியுன் னருளல்லா
தேழை நானே யீடேறுவேன்
எல்லாம் நீ மனது வைத்தா
லிந்த்ரன் நானென்றே கூறுவேன்—பா (பா)

வேண்டியபடிக் கித்ததிப்
பாண்டு ரங்க னுக்குப் புண்யம்
மேவிடப் பதவி கொடுத்தோனே—சர்ப்ப
வீரனும் காளிங் கன்கொண்ட
வீண்கர்வந் தனை யடக்க
வெண்மணித்தலையில் நடித்தோனே
நீண்ட மருத மாத்ருைதத்
தீண்டியே புருடாக்கி

நிந்தையறப் பண்பருளி
நின்றவா கடைக் கண்ணோக்கி (பா)

கோடையிடி காற்றுமழை
கொட்டவே கோகுலத்தோர்கள்
கோபாலா வென்றலறிக் கொண்டாட—திடங்
கூறியே பருவதத்தைக்
குடையாய்ப் பிடித்தாய்விந்தை
கோலாகலாலீலைப் புகழ்க்ரீடா
பாடும் பஜனச் சன்மார்க்கப்
பாங்குள்ளோர் கட்குச் சொந்தனே
பாருதேன் தமிழ்ச் சுந்தரான்
பக்திபூஷணு னந்தனே (பா)

---

இராகம் இந்தோளம்—தாளம் ஆதி.

சாமசவரகமணு என்ற கீர்த்தனை வர்ணமெட்டு.

பல்லவி.

தாதா தசரத சுதா ததி கதி
தாத நீத மாவிநோத தபோத சுபோத (தா)

அநுபல்லவி.

சீதாரமணசுகுண ஜெயராகவ
சீர்பததள சேவையீகுவாய்
மகாவைபோக (தா)

சரணம்.

ஏகவசனுமிர்தா ஏகபத்தினிவிர்தா
ஏகபாணப்ரயோக வெழிற் சரிதா
தியாகசுஜனரசிகா திகழ்சுந்தரன்
தியானமருவும் க்ஷேம நாம ராம ராம ராம (தா)

---

இராகம் நாட்டைக்குறிஞ்சி—தாளம் ரூபகம்.
எக்காலத்திலும் மறவேன் என்ற வர்ணமெட்டு.

பல்லவி.

சத்ய சன்மார்க்க மந்ரமே ஸ்ரீராம நாமம் (ச)

அநுபல்லவி.

நித்யானந்த விஸ்த்தாரமாய்
நீடிக்கச் சுந்தரன் பாடற்சுதந்தர (ச)

சரணம்.

அசத்தையுங் காம
விஷத்தையும் பவ

| | | |
|---|---|---|
| கசத்தையுந் | தள்ள | |
| விசைத்திடும் | உள்ள | |
| நிஜத்தையும் | பக்தி | |
| ரசத்தையும் | அருள் | |
| வசத்தையும் | பாதாம் | |
| புஜத்தையும் | பெற | (ச) |
| சினத்தையுங் | கர்வ | |
| மனத்தையும் | வஞ்ச | |
| வினத்தையும் | பொல்லாத் | |
| தனத்தையுங் | கெடக் | |
| கனத்தையுஞ் | சுப | |
| தினத்தையும் | ப்ரந்தா | |
| வனத்தையும் | ஞான | |
| சனத்தையும் | கொள்ள | (ச) |
| அடத்தையும் | பட்ட | |
| கடத்தையும் | கெட்ட | |
| நடத்தையும் | வீண்சங் | |
| கடத்தையும் | வெல்லத் | |
| திடத்தையும் | புண்யச் | |
| சடத்தையும் | இருப் | |
| பிடத்தையும் | பலப் | |
| படுத்திடச் | செய்யும் | (ச) |

ராகசுதாரச என்ற கீர்த்தனை வர்ணமெட்டு.

இராகம் மயூரத்தொனி—தாளம் ஆதி.

பல்லவி.

கோகுல பாலகா கோபிகாஸ்ரீசுகா
கோதிலாத குணஸ்நேகா (கோ)

அநுபல்லவி.

மாகருடவாகனு வந்தருள்வாய் மோகனு (கோ)

சரணம்.

நிதானசம் ரக்ஷகாசன்
நிதானபக்ஷ மீகுமுன்
பதாம்புஜ மேகதி
பக்த சுந்தரன் துதி (கோ)

---

மரகதமயில்மீதேறியே என்ற வர்ணமெட்டு.

இராகம் இந்துஸ்தான்காபி—தாளம் ஆதி.

பல்லவி.

தசரத பால புஜபலராம
ததியே கதிதா பதமே தொழுதேன்
பஜனு சுஜனு சமுகா ஜெய ஜெய
பத்தர் சித்தர் நத்தும் சக்ரவர்த்தியே (த)

தினகர வம்ஸத்திலகா துளபா
செந்திருமார் பா வந்தருள் நீபா
கனமாருதி பூஜித சாது குண
கருணவதார திருநாமசார (தி)

தீதண்டிடாத கோதண்ட ராமா
சீதா சகிதா நீதா சுகிர்தா
மாதிண்புய ரா வண பாதகனை
மடித்தவருள் கொடுத்த புகழ்படைத்த (தி)

பவமே யகலச் சுகமே புகலப்
பண்புடன் வந்தருள் சிந்தைகுளிர்ந்திட
தவமா முனிவோர் கவனதிபனே
சந்தத முந்திகழ் சுந்தரன் நம்பினேன் (தி)

---

மதுரகான மிர்துவசனி என்ற வர்ணமெட்டு.

இராகம் சுருட்டி தாளம் ஆதி.

பல்லவி.

கமலநேத்ரத் திருக்கருண எழிற்
கருடனேறுந் தருண மெய்ச்சரண (க)

அநுபல்லவி.

சுமதியாகத்துதித் தேனே என்
துன்பமுங் கெட
வின்பந் தந்திட
விதுததி சுதி யுதவிடுஞ் செழுங் (க)

சரணம்.

அண்ட கோளத்தை வாயில்
அடக்கும் வல்லபனே
ஆரணங்களை மீள
வளிக்கும் நல்லவனே

அண்டினே னெந்தனையாளும் பே
ரன்பு சுந்தரன் நம்புந் துங்கமே
யதி வித ரணகுண நிபுணனே (க)

---

கனிகரமுஞ்சி என்ற கீர்த்தனை வர்ணமெட்டு.
இராகம் காப்பி தாளம் ஆதி.

பல்லவி.

கருணைசெய் கண்ணு
கார்முகில் வண்ணு

கபடநா டகலீலை
காட்டிட வோவண்ணு (க)

அநுபல்லவி.

திருமகள் மருவிடுந்
திகழ்மணி மார்பா
தேவர் புகழ்ந்து தொழு
தேற்றும் ப்ரதாபா (க)

சரணம்.

துருவனெனுஞ் சிறுவன்
தூயம் மெய்த்தவனே
தோன்றியவனை என்றுந்
துலங்க வைத்தவனே
சரணப தாம் புஜம்
சார்ந்தேனிது நிஜம்
சந்ததமுஞ் சுந்தரன்
சாதனு பக்தி வசம் (க)

பூவியிற் பெண் ஜேன்மம் எடுத்தேன்ன என்ற வர்ணமெட்டு.

இராகம் சாவேரி—தாளம் ஆதி.

பல்லவி.

எனக்குந்தன் துணையல்லா
லிவ்வுலகில் வேறுண்டோ
எல்லாம் நீயறியாத தல்லவே ஸ்ரீ வைகுந்தா (எ)

அநுபல்லவி.

தினப்பொழு தெல்லாமற்பச்
சேட்டையிலே கழித்தேன்
ஜெகஜாலப் பிரட்டாலே
திடுக்கிட்டல்லோ விழித்தேன். (எ)

சரணம்.

சாறுஞ் சுற்றத்தா ரெல்லாஞ்
சந்தைக்கூட் டந்தானையா,
சம்சார சாகரம் விசாலமென்பது பொய்யா
சோறும் தண்ணீ ரடைக்கும்
தோலுடம் பென் றும் மெய்யா
சொல்வாய் சுந்தரன் தமிழ் தோத்திரக்குணத்துய்யா (எ)

நம்பியாழ்வார்கள் சொன்ன
நாலாயிர ப்ரபந்த
நல்லோருளத் திற்குடி
நாடும் நட்பே சுகந்த
துன்பவினை யகற்றத்
துதித்தேன் துளசி ப்ரந்த
சுபவனலீலா வேணு
சுரநாதப்ரம மானந்த. (எ)

ஆபத் பாந் தவனென
அன்புடனே யுரைப்பார்
அடைக்கலங் காவாவிடில்
யாருன்பேருச் சரிப்பார்
மாபக்தி வல்லவருன்
மனதையுடன் கரைப்பார்
மைந்தனே தறிகுவேன்
மகிழ்ந்தே கடைக் கண்ணிற்பார் (எ)

தரித்திர மகன்றிட
தனமிகுந்திட வேண்டும்
சாற்றுமது போல்பாவந்
தணிக்கவுன் னருள் வேண்டும்

அருள்புரிந் தால் நீடூழி
யழியாதிருக்க வேண்டும்
ஆனாலுமுன் பாதத்தை
யகலாத வாழ்வு வேண்டும் (ஏ)

ஓ பாலசண்முகா என்ற வர்ணமெட்டு.

இராகம் காப்பி—தாளம் ஏகம்

பல்லவி.

ஸ்ரீ ராமச்சந்திரா சீதாபதே.
திருவருள் புரிகுவாய் ஜெய ஜெய (ஸ்ரீ)

அநுபல்லவி.

தாராரும் வேந்தர் போற்றும்
சரணப் பதநற் கதிதரும் (ஸ்ரீ)

தாராரும் வேந்தர் போற்றும்
சத்ய சகலகலை வித்ய
வினையமிகும் நித்ய சுபவரத (ஸ்ரீ)

தாராரும் வேந்தர் போற்றும்
தசரதத் திகிரிமகிழ் பெருகும்
மெய்த் தவசுதனே
புஜபலத் திகழ் மகிட (ஸ்ரீ)

சரணம்.

ராகவபருக் பருக்கு ரம்யராஜ்ய பாரனே
ரகஸ்யசாரனே
பாகுசெஞ் சொ லோது கீத
பக்த்தன் சுந்தரன் நத்தும்
துங்கம கத்வா மங்கள (ஸ்ரீ)

---

தேராசமுஜாயோரே என்ற வர்ணமெட்டு.

இராகம் இந்துஸ்தான் தோடி தாளம் ஆதி.

பல்லவி.

சூர்ய நாராயண கோவிந்தா மாமுகுந்த (ஹரி)

அநுபல்லவி.

ஆராயும் போதெல்லாமுன்
னரும் பெரு மற்புதத்தை
பாராயணம் செய்யவேபரிவுகொண்டேன் (ஹரி)

சரணம்.

பசுந்துளப மார்பனே பகரும் ஞானதீபனே
விசும்பிற்பரவும் தேவ தேவனே விதரணனே (ஹரி)
சங்கு சக்ர தாரனே சகல சமத்காரனே
பொங்கும்பாலாழிவாழும் புண்ணியாபோற்றினேனே (ஹரி)

சந்ததமுஞ் சுந்தரன் சாற்றிடுங்கீதா சுகா
வந்தருள்வாயுன்னை யல்லாது வருந்துணையார் (ஹரி)

## ஆசிரிய விருத்தம்.

அமுதாழி மீதரவ மஞ்சத்திலே திகழு
மகிலப்ர தாபவரசே
யரவணைச் செல்வமே திருமகடினந்தழுவி
யணைகின்ற மணிமார்பனே
சமுதாய விற்பனத் தாமோதராவெழிற்
சாமளத்திவ்ய ரூபா
சங்கு சக்ராயுதக் கையனே சமரசச்
சாது சன்மார்க்க நேமா.
இமையாத விண்ணவற் கின்னல் தவிர்க்கவந்
திட்ட கெம்பீர வாழ்வே.
எண்ணுதற்கின்பசம்பன்ன விஸ்த்தாரனே
எல்லையாம் நல்லுளமெனுங்
கமலாலயத்திலுறை சுகபோத விர்த்திபெற
கவனுதிபத்ய மருள்வாய்
கனசொற் ப்ரபந்தனே தமிழ் வித்வசுந்தரன்
கருதத்தகுந்த கருணா.

கனவு போலாம் மனிதர் வாழ்வு என்ற வாணமெட்டு.

இராகம் சங்கராபரணம்—தாளம் ரூபகம்.

பல்லவி

உனையலாது உதவியேது
ஓது சீதாபதி (உ)

மகுடங்கள்.

உம்பர் வணங்கு ஜெயம் பெறு
சம்ப்ரம மங்கள ரஞ்சித சுக (உ)

உபயப்பத மலர் நத்தினே
னபயப்படி யருளைப்புரியவே (உ)

உத்தமரு ளத்திலேக
களிக்கவே நலப்ரபோத நிதி (உ)

ஒப்பற்றிடு வெற்றிக்குயர்
செப்பத்தகு பொற்புற்றிடுசுய (உ)

அநுபல்லவி.

மனமறிந்தினி மர்ம்மமேன் துய்யனே
மங்களயோக மகத்வராமையனே (உ)

சரணம்.

பேசுதற் கின்பம் பெய்யும் பகவானே
பேதமில்லாத நட்பே மிகுந்தோனே
மாசற்றிருக்குஞ் சன் மார்க்கத்தைத்தானே
மைந்தனுக்கின்றே மகிழ்ந்தருள் கோனே (உ)

சர்வ ஜீவகோடி சாற்றுங்காருண்ய
சம்ரக்ஷகா மகா சாத்மீகப் புண்ய
தர்ம சொரூப சமரசக்கண்ய
சத்காலக்ஷேம சங்கீத சாரண்ய (உ)

ராகசுரலய ஞானமுய்வோனே
ரம்மித்து பக்திர சத்தினிற்றூனே
த்யாகராஜய்யர் தெலுங்கிசைத்தேனே
தித்திக்கக் கேட்டருள் செய்த சீமானே (உ)

சிந்தனை யீடேறச் செய்வாய் இக்காலே
சேயன் துதித்துச் செப்பினேன் பண்காலே
சுந்தரன் நம்பித் தொழுந் திருமாலே
தொல்லுலகிலருள் நல்கமென்மேலே (உ)

ஷடானன சிகிவாகனு என்ற கீர்த்தனை வர்ணமெட்டு.

இராகம் கமாசு—தாளம் ஆதி.

பல்லவி.

ஜெனுர்த்தனு ஜெயவாமனு
செய்வாய் நின்னருள் ஜெகன் மோகனு (ஜெ)

அனுபல்லவி.

விநோதசுகா விபோதமகா
விண்ணவர் தொழும்
வீரலட்மி பாகா (ஜெ)

சரணம்.

தஞ்சம் நீயல்லாது
தாரணி யிலேது
தமியே னென்மீது
தகுமோ இவ்வாது (ஜெ)

அஞ்ச லென்றொரு
ஆதாரங் கூறாய்
அன்பாய்ச் சுந்தரன்
அண்டினேன் கண்பாராய் (ஜெ)

## ஆசிரிய விருத்தம்.

அலையாழி தனிலேகி யாரணங் களைமீள
வமரருக் கருளவில்லையோ
அயிலையெனும் பொய்கைதனி லானைக்கு வந்தவிட
ரன்போட் கற்றவில்லையோ
நலிவான ததிபாண்டு ரங்கனுக் கன்னுளில்
நற்கதி கொடுக்கவில்லையோ
நாடியே மரமாகி னின்றோரையுருவாக்கி
நடமாட வைக்கவில்லையோ.
கொலையாழி போல மழை கொட்டவே கிரிதாங்கிக்
கோகுலங் காக்கவில்லையோ
குணமான பாண்டவர்கள் கோரும் படிக்கெலாம்
கூடித்திரிந்ததில்லையோ
கலிதீர வெந்தனுக் கருளவே யுந்தனுக்
கரிதாகுமோ சொல்லுவாய்
கனசொற் ப்ரபந்தனே தமிழ்வித்வ சுந்தரன்
கருதத் தகுந்த கருணை.

சஞ்சலங்கள்தீர என்ற வர்ணமெட்டு.

இராகம் காப்பி தாளம்—ரூபகம்.

பல்லவி.

அண்டிநேரையாள வன்மமாகுமா
ஆதிநாரணா பாவம் வீண் போகுமா (அ)
கொண்டல் வண்ணங் கொண்ட துங்கனே
கோதிலாத நாதசங்கனே
பண்டுதூணிற் கண்ட சிங்கனே
பல்வளங்கொளுஞ் ஸ்ரீரங்கனே (அ)

அல்லும் பக லாக வுந்தனே
அன்புடன் செய்தேனே சிந்தனே
கல்லுங் கரையுங் கண்டெந்தனே
கண்பாராததால் நிபந்தனே (அ)

அந்தரர் கொண் டாடுந்தாயகா
அம்புஜக்கண் ஞானத்தூயகா
சுந்தரன் தன் தோத்ர நாயகா
சோதியே யுகாந்தசேயகா (அ)

நிரஞ்சினனே என்ற கீர்த்தன வர்ணமெட்டு.

பல்லவி

சதானந்த சமுகா ததியருள்
தயாளங் கொளும்மகா ஜெகவசிக (ச)

அநுபல்லவி.

உதார குணநேமா
வுபயபதமே நம்பினேன்
உம்பர் கும்பிடும் (ச)

சரணம்.

மனமானது உனையேநினைந்து பின்னும்
மதமேகொண்டு எனையே புகழ்ந்து நின்று
வினைகளைய வறியேன்
விரிதருந்தமிழ்ச் சுந்தரன்
வேண்டிடுந் துதி (ச)

---

சங்கீர்த்தன ராமாயணம்.

வாவா முருகா வேலவா என்ற வர்ணமெட்டு.

இராகம் காப்பி—தாளம் ஆதி.

பல்லவி.

ராமாரவிவம்ச சுக ரம்யகுண சோமா (ரா)

## அனுபல்லவி.

தாமதமேன் நேமமருள்
சந்ததமும் சுந்தரன் சொல் (ரா)

## சரணம்.

தார்புகழுமயோத்தி தசரதச் சக்ரவர்த்தி
தவபுத்ரனே ஜெகமெச்சுசு
ஜனரக்ஷகா ஜெயவற்புத (ரா)

தவசியோடுசென்று தாடகைதன்னைக்கொன்று
தக்க வேள்வி மிக்கசீர்பா
லிக்கப்பண்பா யுற்ற துணை (ரா)

பாதஸ்பரிசத்தாலே பாறுங்கல்லை முன்போலே
பருவச்சுய வுருபொற்பக
லிகைபெற்றிட வருளிச்செய்த (ரா)

வீரமுடன் நகைத்து வில்லைவளைத்தொடித்து
வேதப் புகழ் சீதைக் குயர்
பாணிக்ரக மேபெற்ற ஸ்ரீ (ரா)

பார்வேந்தர்களின்முன்னே பரசுராமன்தன்னைப்
பங்கப்பட வம்பைப்புரிந்
தம்பிற்றிடம் வென்றிட்டஸ்ரீ (ரா)

வருட மீரேழுக்கு வரங்கொள் சிற்றன்னைக்கு
வாட்டமில்லா நாட்டப்படி
காட்டிற் பிரியம் கூட்டிட்ட ஸ்ரீ (ரா)

பரதனுக்கும் செப்பி பாதுகை தந்தனுப்பி
பத்தினி சகிதம் லெக்ஷ்மணனுடன் வ
னத்திலணுகிய உத்தம ஸ்ரீ (ரா)

மாது சீதை களிக்க மாயமானைப் பிடிக்க
மாரீசன் பின் சோராது சென்
றுராயமுன் போராடிய (ரா)

ஓ லெக்ஷ்மணா லெக்ஷ்மணா உனக்கபயமென
ஓதிட்டமா ரீசப்பயல்
வாதைப்பட சேதித்த ஸ்ரீ (ரா)

தம்பி லெக்ஷ்மணனிங்கு தான்வரச்சீதைக்கங்கு
ததியார் துணை யெனவே சகோ
தரனோடதி விரைவேகிய (ரா)

தேவியைக் காணுதெங்குந் தேடியலைந்திரங்குஞ்
சித்தமுணர்ந் துற்றதையு
ரைத்த ஜடாய் வுக்கோர் சுக (ரா)

துஷ்டவாலியும்மாளச் சுக்ரீபனரசாளச்
சூட்டிப்படை கூட்டிக்குறி
காட்டித்திட மூட்டிட்ட ஸ்ரீ (ரா)

தூயசீதையைக்கண்டு சூடாமணியைக்கொண்டு
தோரணையாய்க் கூறிடும் சீர்
மாருதியின் பிரீதிமிகும் (ரா)

முந்தும் விபூஷணர்க்கு முந்நீருள்ளவரைக்கும்
முங்காப்புகழ் லங்காபுரி
துங்காவென நன்கோதிய (ரா)

சேது பந்தனத்தடம் செய்தே ராவணனிடம்
சீராய்ச் சுக சாரணர் போய்க்
கூறும் விதம் வீரம் சொன்ன (ரா)

ராக்ஷதப்போர்க்களத்தே ராவணனைவதைத்தே
நாடிப்ரிய சீதைச்சிறை
மீளப்புரி நாமப்பிரிய (ரா)

பரத் வாசர்முன்கண்டு பாரவிருந்தை யுண்டு
பரதற்குதூ துரை செப்பமா
ருதிநத்தியே கிடவைத்தஸ்ரீ (ரா)

மூதூராயோத்தி வந்தே முகமலர் மலர்ந்தே
முடி மன்னர்கள் புடை சூழ்ந்து பொன்
நடியே தொழக் கெடி யோங்கிய (ரா)
தேவர் துதிமுழங்கச் சீதையுடன் துலங்க
திட்டமிகு சட்ட மாய்வ
திட்டர் கைப் பட்டாபிஷேக (ரா)

---

மூங்கி முழுகிற பெண்ணே என்ற வர்ணமெட்டு.

இராகம் தன்யாசி—தாளம் ஆதி.

பல்லவி.

நித்திரை விட் டெழுந்திடும்
ஸ்ரீரங்க நாதரே யிந்
நேரம் விடிந்து போனதே (நி)

அநுபல்லவி.

பக்தர் முதல் சித்தர்களும்
பகர் ஜீவ முத்தர்களும்
பத்மபத சேவை காணப்
பணிந்து காத் திருக்கிறார் (நி)

சரணம்.

உன் மருகன் கையிற் கொண்ட
வுயர் சேவல் கொக்கரக்கோ
கோவென்று கூவித்தாவுதே
ஓங்கும் மரங்களிலே காகங்கள் காகாவென்று
வுளமகிழ்ந்தே யுலாவுதே
இன்னும் பூபாளராக விங்கிதநாதசுரம்
ஏற்கலேயோ பாக்கிய லெட்சுமியுடன் சீக்கிரம் (நீ)

பூசுரர் யானேகள் மீது
புண்யகாவேரி யாற்றின்
புனல்கொண்டு வருகின்றனர் இன்னும்
பூசைக்குரிய நல்ல
புட்பங்களே யாழ்வார்கள்
போற்றிக்கொண்டு வருகின்றூர் உந்தன்
ஆசைநெய் வேத்யபூஜை
ஆனந்தத்திற் கெல்லோரும்
அண்டிவந் திருக்கிறூர்
அய்யனே கண்ணிற்பாரும் (நீ)

துஷ்ட நிக்ரஹம் செய்யத்
தொல்லுலகில் வேஷம் போல்

தோன்றிவந்த தினலுப்போ இல்லை
துதிப்பவற் கெல் லாம் அருள்
கொடுக்கக் கொடுக்கவின்னும்
துடருவாரென்ற சலிப்போ
இஷ்ட ஜனரக்ஷகா
இயம்புஞ் சுந்தரன் தமிழ்
எற்றித்தொழுதோ மெங்கள்
போற்றுதலுக்கே இசைந்து (நீ)

---

மதனசரமழை யதனிலேனைவிட என்ற வர்ணமெட்டு.

இராகம்-சங்கராபரணம்—தாளம் சாப்பு.

பல்லவி.

துதிக்கினிய திருப் பதிக்குரிய செல்வத்
தூயனே மலர் வாயனே—செய்யுந் (து)

அநுபல்லவி.

விதிக்கு மயனொடு விமலனும் மனதில்
மதிக்கும் விதரண மிகுத்தசுரலய (து)

சரணம்.

| | |
|---|---|
| சகல புவனமும் | மகிழும் மகிமைசேர் |
| சதுர்மறை புகழு | மரிய விரதனே |
| சமரசமிகுஜன | ரசிகபஜன |
| சங்கம் வந்துவி | ளங்கும் வரதனே |
| பகருமெளியவர்க் | ககங்குளிரக்கிருபை |
| பாலித்திடுமனு | கூலச்சரிதனே |
| பக்தர்முதல் | சித்தர்களுஞ் சொலி |
| நத்து மெழிற் | கற்பகமே நவ |
| ரத்தினமே புத் | தமுதே யென |
| நித்தமுமே வித் | திருவாய் மொழி (து) |

| | |
|---|---|
| துளபமணியணி | களபப்புயஜெய |
| துணையுமுனையலா | தினியொருவருண்டோ |
| துரிதம்கருடனில் | வருகுவாயுனையே |
| தோத்தரிக்கு | மெதார்த்தமுமிரண்டோ |
| ஒளிர்மிகு செழிய | மாகத மலைபோல் |
| ஓங்கி வளரருள் | தேங்குஞ்சுபகர |
| உன்பங்கய பைம் | பொன் பதமலர் |
| தந்தென்கன | துன்பந்தவிர் நய |
| சந்தம் பயிலுஞ் | சுந்தரனது |
| பண்பின்படி | யின்பம் பெருகிடுந் (து) |

பெருமை பெருகக்காலம் என்ற வர்ணமெட்டு.

இராகம் பைரவி—தாளம் சாப்பு.

பல்லவி.

ஈயாத லோபியர்க ளிட மணுகி வாழ்வதேன்
எந்தாய் செங் திரு மங்கையே. (ஈயா)

அநுபல்லவி.

ஓயாது தர்மஞ் செய்யும்
உத்தமரை வெறுத்து
ஓடி யொளிந்து மென்மேல்
தேடிக்கன மிகுந்து (ஈயா)

சரணம்.

பசித்தவற் கொருவேளை
பருக்கையிடா துலஞ்சம்
பறிக்கும் புண் ணியர் பக்ஷம்
பாலிக்கிறுயுன் நெஞ்சம்
கசக்கு தில்லையோ தக்க
காரணஞ் சொல் லாய் கொஞ்சங்
கண்ணேக்கின லெளியோர்க்
காமோ இத்தனை பஞ்சம் (ஈயா)

| | |
|---|---|
| பணமில்லாதவர் | சாகாப் |
| பிணமென்ப | தொருபட்டம் |
| பணமிருந்தா | வவர்க்கு |
| வணங்கச் செய்வ | துன் சட்டம் |
| குணஞ்சிறந் | தாலுமென்ன |
| கூடார்க | ளவன் மட்டம் |
| கொலைபாதக | னானாலும் |
| கொடுக்கிறா | யோரதிட்டம் (ஈயா) |

| | |
|---|---|
| உன்னா | லுலகமென்றே |
| யோங்கும் | புகழ்பிடித்தாய் |
| உண்டோ | விப்படி நீயே |
| வோரம் | செய்யப்படித்தாய் |
| நன்னய | குணத்தோரை |
| நாடாமலே | நடித்தாய் |
| நாணுவிதத்து | முந்தன் |
| நம்பிக்கையே | கெடுத்தாய் (ஈயா) |

| | |
|---|---|
| ஈகையாளர் | வசம் நீ |
| இருப்பதன்றோ | சிலாக்கியம் |
| என்போன்றோருக்கு | மனம் |
| இரங்குவதே | யோக்கியம் |

பாகுதமிழ்ச் சுந்தரன்
பகர்ந்தே னிவ்வாக்கியம்
பாலித்தருள் வாயுந்தன்
மேலான பாக்கியம் (ஈயா)

---

நிஜவர்மமுலனு தெலிசினவாரிகி என்ற கீர்த்தனவர்ணமெட்டு
இராகம் உமாபரணம்—தாளம் ஆதி.

பல்லவி.

பஜன ஜீவரத்ன மிர்தசுக நாமா
பரமபக்தர் மகிழும் பரிமளத்தாமா (ப)

அநுபல்லவி.

விஜய னுக்கினிய வஜனப்ரசாரா
வேகமாயிவ்வேளை கருடனின்
மீதுவா விவேக சுந்தரனது (ப)

சரணம்.

கருணாகரமிகு கமலநன்நேத்ரா
கருதும் படிக்கருளத் தயவுரும் பாத்ரா
சுரலயநாரதர் தும்புரு கீதா

துவாரகா வைபோகக் கோகுல
பாலகா விசால ஞாலமகிழ் (ப)

---

ரேகுவம்ஸசுதா என்ற கீர்த்தன வர்ணமெட்டு.

பல்லவி.

கதிரோன் குல நிதி ராகவா
கதிவேறில்லை பதி நீயே காவா (க)

அநுபல்லவி.

மிதுலாபுரி யது பாங்குறும்
மெல்லி சீதை நேமக் கல்யாண ஸ்ரீராமா (க)

சரணம்.

சாது சங்கச் சாரா
சர்வ ஜீவாதாரா
கோதில்லாக் கெம்பீரா
கோதண்ட வீரா
ஏதேதின்னஞ் சோதனையோ
இங்கித சுந்தரன் மங்கள சங்கீத (க)

சிட்டாசுரத்திற்குச் சாஹித்யம்.

இத்ததி நத்திய ருள்புரி யத்திகழ்
பத்மப தத்துதி செப்பினேன் நித்யமு
மெனதிரு தயமதி லுறைபெறு மிறைவனே
இகமதில் பழவினை எனுமிரு ளகலவே (க)

---

சாத்மீகம் நமது தாய் நாட்டில் வேண்டும் என்ற வர்ணமெட்டு,
இராகம் இந்துஸ்தான்பியாக்—தாளம் ஆதி.

நாரணா உன்னை நம்பினேன் நானே
நம்பினேன் நானே யதி
யன்போடு தானே (நா)

பாரளந்த காரணா
பாவ நிவாரணா
பசுந்துளபத் தாரணா
பாக்ர பரிபூரணா (நா)

தொகையரு.

பணிமலர்த் தாளனே
பகர்கலைக் ஞானனே
பாதளசேஷ சயனா

ஜனசுக க்ஷேமனே
ஜய ஜயக் கேசவ
தயைமேவுவன ஜநயனு (நா)

(பாட்டெடுப்பு)

சாமளரூபத்திருத் தாமோதரா நீயருள்
தேமிகு சுந்தரனின் பாமணங்கமழ்ந்திடு (நா)

---

எப்படி மனந்துணிந்ததோ சாமி என்ற வர்ணமெட்டு.

இராகம் தோடி—தாளம் ரூபகம்.

பல்லவி.

எப்படிக் கடைத் தேறுவேனையா
என்பாலன் போடு
இன்பவசன மொன் றருள் மெய்யா துய்யா (எ)

அநுபல்லவி.

செப்புதற் கரிய திவ்ய லாவண்யா
தேவர் தினந்தினஞ் சேவிக்கும் புண்யா
சப்தமேருவைச் சார்ந்த சரண்யா
சன்மார்க்க மூட்டுஞ் சரித்திரக் கண்யா (எ)

சரணம்.

பக்தி வினையப் பாங்கையறிந்திலேன்
நல்லோர்கள் சேவை
பணிந்தன் போடு பழகவுந்தெரியேன்
பன்னூரு மெந்தன்
சித்தம் போலவே திரிந்து திரிந்து
சிச்சியற்பரோடு கந்து மகிழ்ந்து
பித்தனைப்போலு மறந்து மறந்து
பிரார்த்தித்தேன் முறை தெளிந்து தெளிந்து (எ)

தாய்க்கொளித்திடுஞ் சூலுந்தானுண்டோ
அவ்வாறு போல
சாமி நீ யறியாதது முண்டோ
உன்நோக்க மென்மேல்
வாய்க்கவேண்டி வணங்கினேன் நானே
வஞ்ச தந்ர மந்ர மறியேனே
பாக்ய சுந்தரன் பாடலுய்வோனே
பாருலகத் தேவி சாரமற்றுத் தானே (எ)

## ஆசிரிய விருத்தம்.

அண்டத்தை யோரடி யளந்தவனு நீ நெடிய
அவனியை யுண்டவனும் நீ
ஆக்குபவன் நீ யருள ளிப்பவனும் நீ சுருதி
யாதார மானவனும் நீ
சண்டப்ர சண்டமாது ட்டரை யடக்கவே
சக்ராயு தத்திகிரி நீ
தந்தை நீ தாயும் நீ சமயச் சகாயன் நீ
சத்குணச் சம்பன்னன் நீ
தொண்டற் கிணங்குவதும் நீதேவ தேவர்கள்
துயரகற் றிடுவோனும்நீ
துதியும் நீ நிதியும் நீ யன்றிவே றேதுகதி
துரிதத்தி லருள் புரிகுவாய்
கண்டொத்த மொழிமாது மாமகள் மார்பனே
கார்முகில் வண்ணமாலே
கன்சொற்ப்ர பந்தனே தமிழ்வித்வ சுந்தரன்
கருதகத்துற்ற பொருளே.

---

கண்டேன் கண்டேன் என் கண்ணார என்ற வர்ணமெட்டு.

இராகம்-கல்யாணி—தாளம்-ஏகம்.

பாடுவோம் வாரீர் நாமெல்லோருங்கூடி
பண்பானந்தந் தனைநாடி
பக்திவுடன் கொண்டாடி—பஜனை (பா)

மகுடங்கள்.

பகர்பஞ்சம சுதிகொஞ்சிட
லயமுஞ்சரி கொண்டு (பா)

பவமற்றிட வித்தரையினில்
சுகமுற்றிட வேண்டி (பா)

பற்றற்றசுத்தர்க்குச் செயவரமருள்
பொற்புச் சித்ரப்பச்சைப் புயனை (பா)

பாரதச் சமர் நேர்படைத்திட
சாரத்தொழி லேநடத்தியகோனைப் (பா)

நீடுநற்கதியா யுறும்
நேமநற்பதியான் சுந்தரன்
சூடும்பொற்பத ராமபிரான் புகழைப் (பா)

ஸ்ரீமத்காந்தி என்ற வர்ணமெட்டு.

இராகம்-இந்துஸ்தான்தோடி—தாளம் ஆதி.

ஸ்ரீவைகுந்தன் சிங்காரமாமுகுந்தன்
தித்தித்திடும் பிரபந்தன்
ஜெகம்புகழ் கோவிந்தன் திருச்
சீர்பதத்தையெப் போதும் நத்திநிற்
போமிகத்தினி லேபவப்பிணி
தீண்டாதுகாண்பீர் சத்தியமீது-மென்மேல்
வேண்டுவோர்க்கே யருள்தப்பாது (ஸ்ரீ)

ஈயாதலோபியற் குத்தூரம்
எட்டாதவன் பாதாரம்
என்றேமுன்னோர் பிரசாரம்—பல
நீகும்பக்தியில் தியானம்வைத்தினி
நீள்சவுக்கிய வாழ்வுபெற்றிட
நெஞ்சாரவே துதிப்போம் வாரீர்-புகல்
தஞ்சம்வகிப்பதவன் பாரீர் (ஸ்ரீ)

கண்ணன் கரியமுகில் வண்ணன்
கபாலிநீலியண்ணன் கருதியாளுந்திண்ணன்-அதி

காரணக்கிர் பாகரப்பரி
பூரணத்திரு மாலெனத்துதி
காவியசுந்தரனின் கீதம்—நாம்
ஜீவிக்கும் மந்த்ர மாம்பிர சாதம் (ஸ்ரீ)

---

இன்னந்தூங்குவதழகோ என்ற வர்ணமெட்டு.

இராகம்-வசந்தா. தாளம்-ஆதி.

பல்லவி.

திருப்பதி யிலிருப்பவனே
சேயனெனக் கருள்செய்
வாய்ஜெகத்தில் மகத்தவ (தி)

அநுபல்லவி.

கருக்குழியிலமைத்துக் கண்ணிமைபோலக்காத்து
பொருப்பதை நாடிச்சென்ருய் புண்யந்தானே
சொல்வாய் (தி)

சரணம்.

எந்தையேயுனக்கிந்த யேமாற்றமாகுமோ
மைந்தன்மீதிப்பெரும் வர்மங்கொள்ளப்போகுமோ (தி)

அண்டசராசரத்தை யடக்கியாளும் விநோதா
பண்டரிபுரத்தோனே பாநுகரக்கவொண்ணாதா (தி)

அந்தரர் ஜெபித்திடு மாயிரநாமமந்த்ரா
சுந்தரன் துதிஞான தூயக சுகந்த்ரா (தி)

---

மாமணிமரகதசுபகர சோரூபஞான என்ற வர்ண மெட்டு.

இராகம்-இந்துஸ்தான்காப்பி—தாளம்-ஏகம்.

பல்லவி.

ஸ்ரீ தர ஜெய ஜெய ஹரி
திருவருள்புரி நேமா
ஜெகசுக நாமா (ஸ்ரீ)

யாதவக்குலாதிப விபாவிநோதலீலா
யாழ்வல்லோன் பாலன் போடு கேலியாடுஞ்சீலா
மேவியப்திஞயிர மெல்லியரைக்கூடி
யாவுரிஞ்சுதறியைப்போ லனுபவித்தகிரீடி (ஸ்ரீ)

அடைக்கல மென்றோர்தம்மை
யாளுந்தியாகன் நீயே
இடுக்கமகற்றிச் சேயன்
இன்புறச் செய்வாயே

சந்ததமுஞ் சுந்தரன் சங்கீதப்பிரியகாந்தா
இந்த்ராதிதேவர்போற்று மிறைவனேயேகாந்தா (ஸ்ரீ)

---

## திருப்புகழ்

### நாதவிந்துகலாதி என்ற வர்ணமெட்டு

இராகம்-செஞ்சுருட்டி—தாளம்-ஆதி.

சீர்விளம்பர பராக்பராக்கருள்
தேவர் துங்கமே பராக்பராக்கதி
தீரசிங்கனே பராக்பராக்கெழிற் றிருநாமா

சாதுசங்கனே பராக்பராக் குப
சாரமண்புளாய் பராக்பராக் சுர
தானவங்கமே பராக்பராக் பத மலர்மேவு

தீனபந்துவே பராக்பராக் குயர்
க்ஷேமமங்கள பராக்பராக் புகழ்
சேகரந்திகழ் பராக்பராக் குவி ஜவீரா

ஆழிபந்தன பராக்பராக் புவி
யாளவந்தவ பராக்பராக் கமு
தாயர்நண்பனே பராக்பராக் புஜ பலவீமா

மாமுகுந்தனே பராக்பராக் திரு
மாதுரஞ்சித பராக்பராக் ஜெக
மான்யவிங்கித பராக்பராக் சுப மயமாகும்

ஆதிரங்கனே பராக்பராக் குரு
ஞானசுந்தர பராக்பராக் துதி
யாளவந்தருள் பராக்பராக் முர ஹரிநாதா

---

ஏமாந்துனே முத்துப்பாலாமணிக்கி—என்றவர்ணமெட்டு.

இராகம்-கரகரப்ரியா—தாளம்-ரூபகம்.

பல்லவி.

ஏமாந்திருப்பவர்க்கேது இறைவனருள்
காமாந்த காரத்தினிலே காலங்கழித்து (ஏ)

அநுபல்லவி.

பூமியின்வாழ்வுபெரும் பொய்யான சொற்பனமாம்
தாமதக்குணச் செய்கையாற் சஞ்சலமுற்று (ஏ)

சரணம்.

வட்டியிலும் ரொக்கஞ்சேர் பெட்டியிலும் விளைந்த
நட்டியிலுங்கவனமே நாடோறுங்கொண்டு (வ)

மாயத்திலும் நித்யபஞ் சாயத்திலுங்கயவர்
நேயத்திலும் மகிழ்வ தாய்நிலையுமற்று (வ)

லோபத்திலும் முதியோர் சாபத்திலும் பாழுமுன்
கோபத்திலுங் கொக்கரித் துக்குணம்விடுத்து (வ)

குடிப்பதிலும்பிறரைக்கெடுப்பதிலும்மெய்யன்போல்
நடிப்பதிலும் நன்நயமாய் நாளைக்கழித்து (வ)

ஞானசுந்தரனுரை நற்பஜனைநட்புறு
தீனதயாளபந்துவைச் சிந்தித்திடாமல் (வ)

---

பாராமுகமேனையா-என்றவர்ணமெட்டு.

இராகம்-ஆனந்தபைரவி—தாளம்-ஆதி.

பல்லவி.

நானும் உனதடிமையே நம்பிடுமென்னை
யாள்வதுந்தன் கடமையே—நாத (நா)

அநுபல்லவி.

வானோர் மகிழ் சங்கீதக் ஞானமதுரமிகு
தேனூர் மலர்மகளன் பானாமணனெனும்

பாகா பத்தர்கட்கதி
யூகா இத்ததிவிரை
வாகா நத்தியாளும்வி
பேகா நானிலமிசை (நா)

ஆனைக்கஞ்சித்தொங்குவோ னறுகுவேராறுமுன்னே
தேனைக்கொஞ்சிமெச்சும் போல் சீச்சியுலகினற்ப

வின்பம் பிறகுவெகு
துன்பம் இதற்கோவீணில்
டம்பம் எனக்கருள்பே
ரின்பம் என்னுளுமையா (நா)

போதச்சகுணச்சதுர் வேதப்புகழையணி
நீதச்சரணந்திகழ் பாதப்ரசாதந்தர

வாராய் வந்தேகடைக்கண்
பாராய் மிடிகள்முற்றுந்
தீராய் அடியேனுன்னைச்
சீராய் மனதுள்வைத்தேன் (நா)

செந்தமிழ்க் கவிநய சுந்தரன் துதிக்குஞ்சு
தந்தரனே நன்னும மந்திரனேயுனேயல்

லாது துணையொருவ
ரேது இனியுமெந்தன்
மீது வன்மஞ்செய்யலா
காது ஜெகத்ரட்சகா (நா)

---

## ஆசிரிய விருத்தம்.

செப்பரிய பண்டரிபுரஞ் சீருலாவுநற்
றிருவரங்கங் கதிதருந்
தென்பொதிகை பங்கிலுயரும்பதிகுறுங்கைநிலே
திருவாணமாமலேயுமாம்
ஒப்புவமையற்றிடு திருப்பதியருட்பாவி
யோங்குதிருவாங்கூர் சதா
வுளமெலாங்குளிறவே மெஞ்ஞானவின்பத்தை
யூட்டிடும் வில்லிபுத்தூர்
தெர்ப்பசயனந் தேன்கசிந்திடும் மழகர்மலே
ஜெகநாதப்ராந்தாவனம்

திருமயமிலங்கிடுஞ் க்ஷேத்ரங்கள் மிகவதிற்
றிகழுஞ் சொரூப வடிவாய்க்
கற்பகம் போன்றுவள ரற்புதந்தேங்குபுகழ்
கடவுளே கருணைபுரிவாய்
கனசொற்ப்ரபந்தனே தமிழ்வித்வ சுந்தரன்
கருதகத்துற்ற பொருளே.

---

அச்சமுரிலாகீசே-என்ற வர்ணமெட்டு.

இராகம்-இந்துஸ்தான்தோடி—தாளம் ஏகம்.

இதன் அநுபல்லவிக்குப் பின்வரும் அடிகளைப் பல்லவிபோல் எடுக்கவும்.

மானிடர்க்கெல்லாம் முக்ய
மாகும் தெய்வ பக்தியே
பக்தியே ஜீவன்
முக்தியே (மானி)

அநுபல்லவி

தானென்ற மமதைவிட்டு
சாதுஜனசங் கந்தொட்டு
ஞானகுருநாதன் பாதம் நாடவே (மா)

பூசணம் பூண்டு மென்ன
பொருள்தேடி ஆண்டுமென்ன
காணீரோ கண் முன்னாலே
காயம்மாய மாவது (மா)

பொய்யான தோற்றமிந்தப்
பூதலத்தின் சாதனங்கள்
மெய்யான தொன்றிலேமென்
மேலும்ஜால வேடிக்கை (மா)

ஏமாந்து விட்டா லின்னும்
எத்தனைதான் ஜென்மங்களோ
சாமான்யமோ விசார
சாகரத்தைத் தாண்டவே (மா)

காமனுக்கும் ஏமனுக்கும்
கட்டுப்பட் டிழிந்திடாமல்
நேமுடனே எந்நாளும்
நீடூழியாய் வாழவே (மா)

செந்தேன் தமிழ்பகருஞ்
சுந்தரன் நம்பிவரும்
மந்திரமிது வல்லாது
மார்க்கம்வே றொன்றில்லையே (மா)

தயசூடகதிவே என்றகீர்த்தனை வர்ணமெட்டு.

பல்லவி.

தினமே துதி மனமே யந்தத்
திருமாமகள் மருவிடும் வரதனைத் (தி)

அநுபல்லவி.

முனமே செய்த வினையேகிட
முரளிசுர சுகுண
மூர்த்திசேவை நேர்த்திகாணவே (தி)

சரணம்.

அறிவானதி லறிவோரெவ
ரவரே யவனுக்கதி யருகனென்பார்
இது தெரிவாய் சுக உருவாய்-கடைத்
தேறவே நீ தமிழ்ச்
சுந்தரன் பகர்ந்தவிதமனு (தி)

---

நம்பினேனுனையே—என்ற வர்ண மெட்டு.

இராகம்-கல்யாணி—தாளம்-ரூபகம்.

பல்லவி.

வந்தாள் வாயெனையே—திரு
வாங்கூ ரோங்கும்
பாங்குறும் பத்மனுப (வ)

அநுபல்லவி.

இந்திராதித் தேவர்கோனே
இன்பமூட்டிடு மென்பெருமானே
சுந்தரன் துதி சூடும் பூமானே

துரிதமாகக் கருடனேறிச்
சிறுவன் சேரிற் கருணையோடு (வ)

நிஷ்களங்க ஞானபோத
நித்யானந்த நிரந்தரநாத
இஷ்டரக்ஷக னாகும் விநோத

இனியோர் துணையார் ரவிமுன்
பனிபோற் பவமே யகலவே (வ)

சங்குசக்ர பீதாம்பரதார
சர்வலோக சரணவுதார
மங்களத்திரு மார்பலங்கார

மணங்கமழ்த் துளபமகுட
மிலங்குசத் குணமுராஹரி (வ)

ஆதிசேட சயனயோகா
அற்புதத்திரு வருள்விபோகா
மாதவா மகா வைபோகா

மயங்குமைந் தனந்தரங்
கழுந்தெரிந்துந் தடையோ (வ)

இதையபூர்வ ரகசியசூட்சி
எல்லாமறிந்த இறைவ நின்மாட்சி
பதமிரண்டையும் பற்றியேசாட்சி

பக்தியை வைத்துரை செப்பினே
னித்தநியிற் கதியைத்தா (வ)

---

சோமசுந்தரா என்ற வர்ண மெட்டு.

இராகம்-கேதார கௌளம்—தாளம் ரூபகம்.

பல்லவி.

ராமச்சந்திரா தசரத
ராஜகுமார ரமணிகரசுகுண (ரா)

மகுடங்கள்.

ரவிகுல மரபினில் வரும்பெரும்
புவிபுகழணி ரமணிகரசுகுண (ரா)

ராவணன் மாளவே யோர்கணை
யேவியஸ்ரீ ரமணிகாசுகுண (ரா)

ரட்சித்தருள் பட்சத்துடன்
மெச்சத்தகு ரமணிகாசுகுண (ரா)

அநுபல்லவி.

தாமதஞ்செய்யாது வந்தேன்
சஞ்சலமேதவிர் வஞ்சமேன்
தஞ்சம் நீயே ரமணிகாசுகுண (ரா)

சரணம்.

மாவினேதம ணமலர்ப்பாதா
மங்களச்சுந்தரன் நம்பும் ப்ரசாதா
தேவர்கள்தொழு தேற்றுஞ்சங்கீதா
ஜெகநாதனே சுகநீதனே
அகபூஜித ரமணிகா சுகுண (ரா)

வருவாயே வடமாலி—என்ற வர்ண மெட்டு.

இராகம்-பைரவி. தாளம்-ரூபகம்.

பல்லவி.

வருவாயே திருமாலே ஸ்ரீவை
குந்தா கோவிந் தாமுகுந்தா
சுகந்தந் தருளவே (வ)

அநுபல்லவி.

கருணாகரக் கமலநேத்ரனே
கருடனேறுஞ் சுமதித்தோத்ரனே (வ)

சரணம்

கனலதில் படு மெழுகெனமனம்
கவலையிலுரு கிடவிடுவது
கன்மமோ அல்லாது உந்தன்
வன்மமோ சொல்லாய் மகிழ்ந்து (வ)

ஆதியிலே உயர் தேவர்கள் வேதனைதான்படவே பகை
யோதியபாழும் விரோதிகள் சாதனையேகெடமேவிய
சக்ராயுத பொற்கரனே
சத்காரிய வற்புதனே
தக்கோர்புகழ் நட்பகனே
சற்றேனு மினிப்பயனே

தந்தாளுவா யெழிற் சாமளத்தேகா
சர்ப்பேந்ரன்மீது சயனிக்கும் யோகா
தந்தைதாய் சற்குரு தெய்வம் நீயேகா
சர்வகலாசாலையிலும் சாற்றுவைபோகா
சரணப்பதமலர்நத்தியே துயரற்றிடமுறைசெப்பிடும்
சந்தப்பாச்சுந்தானது சிந்தைத்தாமரையணுகிட (வ)

---

சனித்தோடித்யவே—என்ற கீர்த்தனவர்ணமெட்டு.

இராகம்-அரிகாம்போதி. தாளம்-ஆதி.

பல்லவி.

உனைப்பாடிப் பணிந்தேன்
ஓ மாதவா நான் (உனை)

அநுபல்லவி.

கனத்தபுகழ்த் தோரணா
கருடனேறுங் காரணா
வினைப்பய னகற்றிடும்
விதாணச் சுகக்குணா (உனை)

சரணம்.

பனிமலர்ப்பாதா பகரும்விபோதா
மனதிரங்காதா மைந்தன்மேல்வாதா
ஜனரசிகச் சங்கீதத்
தண்டமிழ்ச் சுந்தரன் சொற்
கனமிகுங் காவியச்சீர்
கருணாகரக் கண்யனே (உனை)

---

எந்து சௌக்கியமேந்து நீ என்ற கீர்த்தனை வர்ணமெட்டு.

பல்லவி.

எந்தையே நீ வந்தருள்வாய்
ஏனோவன்மம் ஈதோதன்மம் (எ)

அநுபல்லவி.

செந்திரும டந்தை மகிழும்
திவ்யரூபா சௌர்யலாபா (எ)

சரணம்.

சகலலோகச் சரணபாதா
சாமவேத நாதகீதா
சுகுணசேயன் சுந்தரன் தன்
துதிவியாபா துளபமார்பா (எ)

துவாதசாந்தப்பதிவைபோக—என்ற மெட்டு.

இராகம்-தேசிகதோடி-தாளம்-ஆதி.

பல்லவி.

அரிஹரி யா விலைசயனா ஆதி நாராயணா ஸ்ரீ (அரி)
அல்லும் பகலும் யானகம் பதித்தேன்
சொல்லும் பொருளும் நீயெனத் துதித்தேன் (அரி)

அநுபல்லவி.

பரிகரி யாதித்தனே பராமுகமேன்வைத்தனே
பற்றினேன் நின் பற்றன்றி வேறொன்று
கற்றிலேன் கடாட்சிப் பதே நன்று (அரி)

தொகையறு.

மதகரி மூலமென வாய்விட் டாற்றுமுறை
வாங்கியருள் தந்த செவியே—ஒரு
மனிதன்முறை கேளாது போனதும் புதுமையே
வாய்த்திட்ட தென்ன விதியே

சரணம்.

சதமெனக்குனது தஞ்சம் தருவதற்கேனிவ்வஞ்சம்
இதம்புரியாத நெஞ்சம்
இருந்தென்ன பலன் ஈதென்ன காருண்யம்
வருந்தினேன் தயை வைப்பதுதான் கண்யம் (அரி)

தொகையறு.

பால்மணம் மாறாத பாலகன் துருவனைப்
பார்த்தருள் புரிந்த விழியே—இந்தப்
பாரிலோர் மனிதன்யான் படுகின்றதுயர்தீரப்
பாராததென்ன பழியே

பாட்டெடுப்பு.

மால்மகா மயக்கத்திலே மாதரா ரியக்கத்திலே
சாலவும் துவக்கத்திலே
சஞ்சலப்பட்டுத் தவித்தாலும் நின்பேரு
நெஞ்சகந்தொட்டு நினைத்தனன் கண்பாரு (அரி)

தொகையறு.

பெண்ணலோ பாஞ்சாலி பேரவையில் முறையிடப்
பெருகுதுகிலீய்ந்த கரமே—சரி
பேசிடில் ஆண்மகன் நானலோ என்முறை
பேணாத தென்ன தரமே

பாட்டெடுப்பு.

பண்ணலோ கிருஷ்ணசாமி பகர்தமிழ்க்குரியநாமி
எண்ணினேன் மகிமைநேமி
எந்தப்பிறவி எடுத்தாலும் நின்பாதம்
சுந்தரன் பாடுவேன் தோத்திரப்பிரசாதம் (அரி)

நீயேசகாயமேன நினையாமலே என்ற வர்ணமெட்டு.

இராகம்-சகானா—தாளம்-சாப்பு.

பல்லவி.

இனியாகிலுமுன்மன மிரங்கியாண்டருளையா
என்னைக்கைவிட்டாலதன் பின்னே துணையாரையா (இ)

அநுபல்லவி.

கனவிலும் நினவிலுங்
கணமும் மறவாமலே
கருத்தில் வைத்தே துதித்தேன்
கடையனென்னை மண்மேலே (இ)

சரணம்.

அழியாநிலையருளை யளிக்கவல்லவன் நீயே
ஆனதினாலடிமை அண்டினேன்தெரிவாயே
மழைவண்ணத்திருமேனி மாலேயிம்மௌனமேனோ
மாயவன் நீகொண்ட மர்மங்களறிவேனோ (இ)
எல்லாப்பிழையும்பொறுத் தீடேற்றுதலுன்பாரம்
இனியேன் சோதனையுந்த னிருதாளெனக்காதாரம்
வல்வினையகற்றிட வந்தேபுனிதமாக்கி
வாழ்விப்பாய்க்கருணைசேர் வனஜக்கண்களால்நோக்கி (இ)
கல்லுங்கரைந்துருகுங் காணுவாயென்வீதம்
கருணையில்லையோ மேவிக் காப்பதுவாப்ரமாதம்
நல்லோர்குணங்குடியை நாடிடுந்தூயனே
நம்புஞ் சுந்தரன் கீத நாதப்ரம்மநேயனே (இ)

## மதுரைத் தமிழ்வித்வான்
## ஸ்ரீ நா. கிருஷ்ணசாமி நாயுடு அவர்கள்மீது

நன்றிபாராட்டுப்பாசுரம்.

இத்தாநத்திடாயிலோ என்ற இந்துஸ்தான் வர்ணமெட்டு.

இராகம்-தேசிகபியாக்—தாளம்-ஆதி.

பல்லவி.

தமிழ்வித்வ சாத்மீக சாது கிருஷ்ணசாமி மால் (தமி)

அநுபல்லவி.

அமிழ்தென அருளுமை ஆர்ந்த மதுரைநகர் (தமி)

சரணம்.

சங்கத்திலோ ரங்கம் புகழ் எங்கும்பெறத் தேர்ந்தவன்-நனி
சந்தேகந் தெளிவதற்குச் சர்வநூலா ராய்ந்தவன்
மங்காதகீத சாஹித்ய வாக்கிற்பெயர் வாய்ந்தவன் (தமி)

புத்தமுதெனத் தமிழை விர்த்திசெய்யும் புண்ணியன்—என்
போன்றவர்க்குச் சார்ந்து நயம் போதிக்குங்கா ருண்ணியன்
நித்தமும் வித்தகர்நத்தும் நேமமிகும் கண்ணியன் (தமி)

இயலிசை நாடகமும் பயில்பெறக்கற்றவன்—மதி
இணங்கும் வே தாந்தசாஸ்திர இருதயம் பெற்றவன்
நயந்தரப் பாடவல்ல நாவலர்க்கே யுற்றவன் (தமி)

தாய்நாட்டின் பொது நலத்தை
ஆய்ந்துரைக்கும் வாக்கியன்
சமரச விதரண சற்குணசிலாக்கியன்
தூயசுந்தரன் வாழ்த்தும் சுபகரபாக்கியன்

---

## அவையடக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியம்.

வடமொழியில் காளிதாஸ் வந்தும்பல புலவர்பினும்
மலிவாரானூர்
திடமொழியா மாங்கிலத்தில் சேக்ஸ்பியர்பின் புலவர்பலர்
செறிவாரானூர்
கடலனைய தமிழ்மொழியில் கம்பர்வந்தும் புலவர்பலர்
காணப்பெற்றேம்
இடமகன்ற புவியில்கற்று ரிருந்துமென்போற் கல்லாரும்
இருப்பர் மாதோ.

---

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

---

இரண்டாம் பாகம் முற்றிற்று.

முந்துங்கள்! உ முந்துங்கள்!

வாங்குவதற்கு முந்துங்கள்.

**V. K. முத்துச்சாமிக்கவிராயரவர்கள்**

இயற்றிய

தற்கால நாகரீக சங்கீத சம்பூர்ண

# ஸ்ரீ கிருஷ்ண லீலா.

## வி. கன்னையா கம்பெனியார் அவர்களின்

ஆப்டோன் படங்களுடன் வெளிவரும் ஓர் இனிய தமிழ் நாடகம்

சொற்பகாப்பிகள் மட்டும் ஸ்டாக்கிலிருக்கிறது விலை அணா 8.

ஷியார் இயற்றிய பக்திரஸக் கீர்த்தனை கூடிய

சீக்கிரம் வெளிவரும் 0—6—0

ஷியார் இயற்றிய தற்கால சங்கீதசம்பூர்ண தசாவதாரம் 0—8—0

ஷியார் இயற்றிய புதியபெரிய பார்வதிசதாரம் சரித்திரம் 0—4—0

T. K. சுந்தரம் கீர்த்தனை முதற்பாகம் 0—8—0

ஷி இரண்டாம் பாகம் 0—8—0

இன்னும் நானாவித தமிழ் புஸ்தகங்களும் விலை சகாயமாய் கிடைக்கும். வேண்டுவோர் நேரிலும் வி. பி. போஸ்டு மூலமாகவும் பெற்றுக்கொள்ளலாம். வியாபாரிகளுக்கும் உபாத்தியாயர்களுக்கும் தகுந்த கமிஷன் கொடுக்கப்படும்.

இங்ஙனம்,

**M. K. சந்தானகிருஷ்ணக் கோன்,**

புக்ஷாப் புதுமண்டபம், மதுரை.